# संघग्रन्थेषु वैदिककलाचारः

# சங்க நூல்களில் வைதிக கலாசாரம்

ஆசிரியர்:
கலைமாமணி எஸ்.என். ஸ்ரீராமதேசிகன்
ஜனாதிபதி பாராட்டைப் பெற்றவர்

வெளியீடு:
ஸ்ரீரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன் ஆச்ரமம்
31, தேசிகாச்சாரி ரோடு
மைலாப்பூர், சென்னை- 600 004

: 2004

# संघग्रन्थेषु वैदिककलाचारः

## சங்க நூல்களில்
## வைதிக கலாசாரம்

ஆசிரியர்:
கலைமாமணி எஸ்.என். ஸ்ரீராமதேசிகன்
ஜனாதிபதி பாராட்டைப் பெற்றவர்

வெளியீடு:
ஸ்ரீரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன் ஆச்ரமம்
31, தேசிகாச்சாரி ரோடு
மைலாப்பூர், சென்னை- 600 004
2004

# ஸமர்ப்பணம்

தமிழ் ஸம்ஸ்கிருத மொழிகளில் அமைந்துள்ள உபய வேதாந்தத்தை சீடர்களுக்கு உபதேசம் செய்து அவைகளுக் கிடையே உள்ள ஒற்றுமையை எடுத்துக்காட்டியதைப் போல் உபய பாஷையாகிய தமிழ் ஸம்ஸ்கிருத மொழிகளுக்கிடையே உள்ள கருத்துக் கலாசார ஒற்றுமையை எடுத்துக் காட்டி ஒருமைப்பாட்டை வளர்த்து வரும் ஸ்ரீரங்கம் ஸ்ரீமதாண்டவன் ஸ்ரீரங்க ராமானுஜ மஹாதேசிகன் ஸ்வாமிகளின் 70-வது திருநக்ஷத்ர மஹோத்ஸவத்தன்று ஸ்ரீமத் ஆண்டவன் ஸ்வாமிகளின் திருவுள்ளப்படி அமைந்துள்ள ''சங்க இலக்கியத்தில் வைதிக கலாசாரம்'' என்ற அடியேனுடைய நூலை வெளியிடுவதோடு இந்நூலை ஸ்ரீமத் ஆண்டவன் ஸ்வாமிகளின் திருவடிகளில் சமர்ப்பணம் செய்வது பொருத்தமாக இருக்கும் என்று கருதி இந்நூலை பக்தியோடு ஸமர்ப்பிக்கின்றேன்.

*சிருங்கட்டூர் நடாதூர் ஸ்ரீராமதேசிகன்*

ஸ்ரீரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன் ஸ்ரீரங்கராமாநுஜ
மஹாதேசிகன் ஸ்வாமிகளின் -
70-வது திருநக்ஷத்ர வைபவ மலராக
இந்நூல் வெளிவருகிறது

# முன்னுரை

## *சங்க காலப் புலவர்கள் கையாண்ட புராண உவமைகள்*

இதிகாசப் புராணக் கதைகள் சங்க காலத்தில் வெகுவாகப் பிரசாரத்திலிருந்து மக்களால் ஆதரிக்கப்பட்டு வந்தன. அக்காலப் புலவர்கள் அவற்றிலே ஆர்வமும் தேர்ச்சியும் பெற்றிருந்தார்கள் என்பதும், சங்க நூல்களைப் படிப்பவர்களுக்கு நன்கு புலனாகும். அப்புலவர்கள் புராண இதிகாசக் கதைகளை மூலத்தில் சொன்னபடியே சில இடங்களிலும், கர்ண பரம்பரையாகக் கேட்டு வந்த சில கதைகளைக் காலத்திற்கேற்றவாறு மாற்றியமைத்தும், - தங்கள் கவிதைகளில் உவமையாகக் கையாண்டு ரசித்த அழகைச் சில உதாரணங்களோடு இங்கே தருகிறேன்.

### *பரிபாடல்*

வேதமும் அவ்வழி செல்லும் இதிகாச, புராண தர்மசாஸ்திரம் ஆகியவை காட்டிய வழியில் செல்வதுதான் வைதிக வழியாகும். சங்க காலத்தில் தமிழ் மக்களிடையே வைதிக கலாசாரம் ஓங்கி வளர்ந்திருக்கிறது. புராண இதிகாசக் கதைகளை அவர்கள் நன்கு அறிந்திருந்தனர். வேத வாக்குகளைப் பின்பற்றி நடந்தனர். பக்தி உள்ளம் படைத்து, கடவுள்களை வழிபட்டு, வேள்விகளையும் செய்து, வேத நெறிப்படி நடந்து வந்தனர். சங்கப்புலவர்கள் மக்களின் பழக்க வழக்கங்கள், ருசி ஆகியவற்றுக்கு ஏற்ப நீதிகளை மக்களிடையே பரப்பும் நோக்கோடு இலக்கியங்களையும், கவிதைகளையும் படைத்து வந்தனர். மக்களின் பழக்க வழக்கங்களைக் கண்ணாடிபோல் எடுத்துக் காட்டுவது

இந்நூலில் உள்ள பரமனின் துதிகள் யாவும் வேத வேதாந்த சாஸ்திர புராணசாரமாய் அமைந்துள்ளன. இம்மைச் சுகங்களை விரும்பாமல் மறுமை இன்பத்திலே இவர்கள் (கவிகளின்) மனம் நாடிச் சென்றது என்பதற்கும் இந்நூலில் பல உதாரணங்கள் உள்ளன. ''பொன்னும், பொருளும், போகமும் நான் வேண்டேன். உன் அன்பும், அருளும், அறனும், எனக்கு வேண்டும்.''

''முத்தியைத் தவிர வேறொன்று வேண்டேன். உன்னுடைய திருவடி சம்பத்தை எனக்கு அளி, நீ வாழ் மலை அடியில் வாழும் வாய்ப்பை எனக்கு அளி'' என்று 5-17, 15, 21 பாடல்களில் கவிஞர்கள் மனமுருகி, பக்தி உள்ளத்தோடு பாடியிருப்பது இதற்குச் சான்று. இதனால் இலக்கியச் சுவையோடு பக்திச் சுவையையும் விசேஷமாக மக்களிடையே பரப்ப வேண்டும் என்ற ஆர்வம் கவிகளின் உள்ளத்திலே பொங்கி எழுந்தது என்பதை நம்மால் உணர முடிகிறது. அக்காலக் கவிஞர்கள் என்றும் இலக்கியத்தை விட ஆன்மீகத்திலும்அ பக்தியிலும் தான் அதிகம் ஆர்வம் கொண்டிருந்தனர் என்பதை சங்க நூல்கள் மூலம் நன்கு அறியலாம். ''யாகம் செய்வதில் அதிகம் அக்கறை காட்டுகிறாய். மறு பிறவியிலும் உன்னைத் துதிக்கும் பேறு எனக்குக் கிடைக்க வேண்டும்'', ''உலகம் யாவும் உன்னிடமிருந்தே தோன்றின'' என்பது போன்ற கவிகளின் பக்குவ நிலையை 13-ஆவது பாடலில் காணமுடிகிறது. ''நாங்கள் பந்துமித்திரர்களோடு உன்னை சரண் அடைந்து வேண்டுகிறோம். எங்களுக்கு அருள்வாயாக'' எனக் கவிஞர்கள் தமக்கு வரும் ஆனந்தத்தில் உறவினர்களும் பங்கு கொள்ள வேண்டும் என்ற பரந்த மனப்பான்மை கொண்டிருந்தனர் என்பதை 2-9-13-15-17-18-21 பாடல்களின் முடிவுரையில்

காண முடிகிறது. தன்னைச் சேர்ந்தவர்களுக்கும் சரணாகதிச் சம்பிரதாய சாரம். இது இந்நூலில் விளக்கப்பட்டுள்ளது. பூமியில் இருந்து முறையே உலகம் அழியும் விதத்தையும், பரமன் முதல் ஆகாயம், வாயு, நெருப்பு, நீர், பூமி என்ற வரிசையில் உலகம் தோன்றும் விதத்தையும் கூறும் 2-ஆவது பாடல் 5-19 வரிகளில் உலகச் சிருஷ்டி பிரளய விவரண பரமான தைத்திரீய சாந்தோக்ய ஐதரேய உபநிஷதங்களின் சாராம்சம் அமைந்துள்ளது. விஷ்ணுவைப் பாடுமிடத்தில் முருகனைக் குறைத்தோ ஏற்றியோ கூறாமல் அவரவர்களைப் போற்றும் பொழுது அவர்கள் பெருமையைச் சொல்வதோடு மாத்திரம் நிறுத்திக் கொண்டு கவிகள் மதசர்ச்சைக்கு இடமின்றிச் செய்து விட்டனர். இது சைவ- வைணவ சமரச சமய நூலாகும். சமரச பாவத்தை சங்கப் புலவர்கள் இதன் மூலம் தோற்றுவித்தனர். குறிப்பிட்ட பெயர் உருவத்தாலன்றி எல்லாப் பெயரும் உருவமும் கொண்டதுதான் பரம்பொருள். அது ஒன்று. இதுதான் சங்கப்புலவர் சித்தாந்தம்.

## *தர்சனங்கள்*

பரம்பொருளை அறிய உதவும் ஆறு தரிசனங்களையும் (சாஸ்திரங்களையும்) கற்று அதன் சாரமறிந்து சங்கப் புலவர்கள் இந்நூலில் அவற்றைக் கையாண்டு இருக்கிறார்கள். இம்மை மறுமைப் பயன்களைப் பெற பற்பல யாகங்கள், அவை இயற்றப்பட வேண்டிய முறை இவற்றை விவரிப்பதுதான் மீமாம்ச சாஸ்திரம். வேத மந்திரர்களும், யாக வேதியில் நாட்டிய யூபஸ்தம்பமும், யாகத்தில் காட்சி தரும் அக்னியும் எல்லாம் பரமனின் உருவமே (2-61-68).

வைகைக் கரையிலே வேதம் ஓதும் அந்தணர்கள் வேத முறைப்படி வேள்விகளை இயற்றினர். அங்கு நீராட வந்த

பெண்கள் தங்கள் ஈரத்துணிகளை அதில உலர்த்திக் கொண்டனர் (11-74). பரமசிவன் வேள்வியில் ஹவிர் பாகத்தை ஏற்றுக் கொண்டான். (5-26-27)- இவை போன்ற கருத்துக்கள் புலவர்களுக்குள்ள மீமாம்ச சாஸ்திர அறிவை நன்கு புலப்படுத்துகின்றன.

25 தத்துவங்கள் சாங்கியமதத்தில் ஒப்புக் கொள்ளப்பட்டன. தனியாக ஈசுவரன் கிடையாது. இது சாங்கியமதம். சாங்கிய காரிகையில் இது கூறப்பட்டுள்ளது. இங்கு 3-77-80 வரிகளில் 24 தத்துவங்களையும் தனக்கே உரிய தமிழ்ச் சொற்களால் ரத்தினச் சுருக்கமாய் பெயரிட்டு விளக்கிக் கூறி இந்த 25 தத்துவங்களினால் பகவான் மஹாவிஷ்ணு எக்காலத்திலும் அறியப்படுகிறான் எனக் கவி விளக்குகிறார்.

இங்கு கூறிய சாங்கியம் ஈசுவரனை ஒப்புக் கொள்ளும் சாங்கியமாகும். இவ்விதப் பிரிவும் ஒன்று உண்டு. சாங்கிய மதத்தைத் தோற்றுவித்த கபிலரும் சங்ககாலப் புலவர் கபிலரும் ஒன்றெென சில அறிஞர்கள் கூறுவது பொருத்தமற்றது. ஆதாரமற்றதும் கூட.

மைத்ரி, கருணா, முதி, தா போன்ற நான்கு பாவனைகளால் மனதைத் தூய்மையாக்கி அதனால் பகவானைக் காண முடியும் என பதஞ்சலி முனிவருடைய யோக சூத்திரம் சமாதி பாதம் 33-ஆவது சூத்திரத்தில் கூறப்பட்டுள்ளது. அதே கருத்தை 4-1-3 வரிகளில் சங்கப்புலவர் இங்கு கையாண்டுள்ளார். இதற்கு சித்த பரிகரம் என்று பெயர். 2 வரிகளில் கரு என்ற சொல்லால் பரமாணுவைக் குறிப்பிட்டு பரமாணுவை அடிப்படையாகக் கொண்ட நியாய வைசேஷிக சாஸ்திரங்களைப் புலவர் இங்கு நமக்கு நினைவூட்டுகிறார்.

மறுபிறவியில்லை எனக் கூறும் நாத்திகர்களால் பரமனை உணர முடியாது என சார்வாக மதக்கண்டனத்தையும் 5-ஆவது வரிகளில் காணலாம்.

பர, வியூஹ, விபவ, ஹார்த்த, அர்ச்சா என பரமனின் 5 விரிவான நிலைகளைக் கூறும் பாஞ்சராத்ர ஆகமக் கருத்தை 13-6, 29-2, 2-20-28-3-81-80-14-ஆவது பாடல் போன்ற இடங்களிலும் எடுத்துக் காட்டி உள்ளனர். சாஸ்திர முறைப்படியே சங்ககாலப் புலவர்களும் பரமனை வழிபட்டு அதன் மூலம் சாஸ்திர அறிவையும் நாட்டிற்கு அளித்து வந்தனர்.

## *புராண இதிகாசங்கள்*

பரமசிவன் திரிபுரத்தை அழித்தவன். நீலகண்டன், ரிஷபவாஹனன், இமயவாசி. கங்கையைத் தரிப்பவன். முக்கண்ணன் என அவனைப் பற்றிய சில கருத்துக்கள் இதிகாச புராணங்களைத் தழுவி இங்கு 1-5-8-9-16-11 காதைகளில் இடம் பெற்றிருக்கின்றன.

முருகன் பிறப்பு, அவன் சூரபத்மனை வென்றது, கிரௌஞ்ச மலையில் பிறந்த வள்ளியை கந்தர்வ முறைப்படியும், தெய்வயானையை வைதிக முறைப்படியும் மணந்தது, வள்ளி தெய்வயானைக்கிடையே சக்களத்திச் சண்டை, இரு தேவிமார்களின் தோழிகளிடையே (கற்பனை) சொற்போர் முதலியவை புராணங்களைத் தழுவி இங்கு 5-8-13-9-14-10, 19-21 போன்ற பாடல்களில் பேசப்பட்டுள்ளன. ''வள்ளியும், முருகனும் தமிழ்க்கடவுள், தெய்வயானை முருகன் திருமணம் ஆரியர் தமிழர்களிடையே ஏற்பட்ட கலப்புத் திருமணம்'' எனச் சில ஆராய்ச்சியாளர் கூறுவது அர்த்தமற்றது. எல்லா மொழிகளுக்கும் அப்பாற்பட்டு

எல்லா மொழிகளாலும் விளக்கப்படுகிற 'தெய்வ'த்தை ஒரு மொழிக்கு உரிமையாக்குவது பொருத்தமன்று. லவலி பரிணயம் என்ற பெயரில் வள்ளி திருமணம் புராணத்தில் வருவதால் இது தமிழருக்கு மாத்திரம் சொந்தமல்ல.

நரசிம்ம, வாமன, வராஹ, இராம, கிருஷ்ண, அவதாரச் சிறப்புகள், அம்சாவதாரம், தேவாசுரயுத்தம், கருடகர்வபங்கம், கண்ணனின் கேசி சம்ஹார கோபிகா நர்த்தனம் போன்ற மஹாவிஷ்ணு சரித்திரங்களும், பரமனைக் காண 33 தேவர்கள் வந்த வகையும், இங்கு புராணங்களைத் தழுவி 2-13-4-3-15-8 பாடல்களில் பேசியிருப்பதைப் பரக்கக் காணலாம். இங்கு இந்த 5 அவதாரங்களைத் தவிர இராம, பரசு ராமாதி மற்ற அவதாரங்களைக் குறிப்பிடாததால் அவை பிற்காலத்தில் சேர்க்கப்பட்டவை. ஆரம்பத்தில் இல்லை எனக் கூறும் நவீன ஆராய்ச்சிக்காரர்களின் போக்கு நகைத்தற்குரியது. தன்னைக் கவருகின்ற அவதாரங்களை மட்டும் சொல்லி ரசிப்பது உலகக் கவிஞர்களின் மரபு. சிலர் சொல்லாத மனதைக் கவர்ந்த அவதாரங்கள் இல்லை என எப்படிச் சொல்ல முடியும். சொல்லாததெல்லாம் இல்லை என்றால் எல்லோரும் எல்லாவற்றையும் எப்படிச் சொல்லியிருக்க முடியும். தவிர, ''புராணங்கள் சங்க காலத்திற்குப் பிற்பட்டவை; அங்குள்ள கருத்துக்களை சங்ககால நூல்கள் எப்படிக் கையாள முடியும்'' என வீண் வாதம் செய்வோருக்கு சரித்திரம் பதிலளிக்கட்டும்.

## *கதைமாற்றங்கள்*

புராணக் கதைகளை காலத்திற்கேற்றவாறும் பரம்பரையாகச் சொல்லக் கேட்டும் கதைகளை சில இடங்களில் மாற்றி அமைத்து ரசிக்கும் பழக்கம் சங்க காலத்திலேயே தொடங்கி விட்டது என்பதை இங்கு கீழே காணலாம்.

முருகனுடைய (5-ஆவது பாடல் 27-49 வரிகளில்) பிறப்பைக் கூறும் பகுதி வால்மீகி இராமாயணத்தைத் தழுவியது. மகாபாரதத்தில் கூறும் முருக ஜனனக் கதைக்கு மாறுபட்டுள்ளது.

அகலிகையைக் கண்ணுக்கு காணாமல் போகும்படி கௌதமன் சபித்ததாக வால்மீகத்தில் உள்ளது. பத்ம புராணம் ரகுவம்சத்தைத் தழுவி அவளைக் கல்லாகச் சபித்ததாக இங்கு கவி 19-48-47 வரிகளில் குறிப்பிடுகிறார். இந்திரனைப் பீஜமற்றவனாக வேண்டும் என முனிவர்கள் சபித்ததாக வால்மீகம் கூறுகிறது. மற்ற புராணத்தையும் பரம்பரையாகச் சொல்லி வந்த கதையையும் தழுவி அவனுக்கு ஆயிரம் பெண் குறிகள் உடலில் காணவேண்டும் எனச் சபித்து பிறகு அவை ஆயிரம் கண்களாக மாறவேண்டுமென மாற்றம் கூறியதாக உள்ள கதையை 9-8 வரிகளில் ஆயிரம் கண்ணினன் என்ற சொல்லால் கவி குறிப்பிடுகிறார்.

முருகன் கோயிலில் இந்த அகல்யா சாப வரலாற்றைச் சித்திரித்திருப்பதாகக் கூறி சித்திரக் கலை மூலமாகவும் தெய்வ ஒருமைப்பாட்டைக் காட்டியிருப்பது போற்றற்குரியது. முருகனிடம் தோற்றுப்போன இந்திரன் தனது உடலிலிருந்து ஒரு பகுதியை எடுத்து மயிலாக்கி முருகனுக்கு அளித்தான் என்றும் அக்னி பகவான் கோழியையும், யமன் ஆட்டையும் பரிசாக அளித்தான் என்றும் இங்கு (5-57-70) கூறும் பகுதி பாரதத்தில் அனுசாசன பர்வத்தில் கூறியிருக்கும் கதைக்கு மாறாக அமைந்துள்ளது. மயிலை, கருடன் முருகனுக்கு அளித்ததாகவும், சந்திரன் ஆட்டையும், அருணன் கோழியையும் அளித்ததாகவும் அங்குள்ளது. எனவே இங்கு கொடுக்கிறவன், கொடுக்கும் பொருள் இவற்றிடையே செய்திருக்கும் மாற்றம் பரம்பரையாகக் கேட்ட கதையை

ஆதாரமாக வைத்துச் செய்திருக்கலாம் என்று தோன்றுகிறது. அல்லது வேறு புராண அடிப்படையிலும் மாற்றம் இருக்கலாம்.

தொழிலுக்குத் தக்கவாறு மக்களை நான்கு வகையாகப் பிரித்து, அவரவர்கள் செய்யும் கடமையைக் கூறி, அக்காலத்திலேயே வர்ண பாகுபாடு இருந்தது என்பதை 1,2,3,4,14,11,8,10-38,39,53,55,28-62,63 ஆகிய பாடல்களில் கவிகள் எடுத்துக் காட்டியிருக்கின்றனர். பாடகர்கள் வாழும் தெருக்கள், நடன மாதர்கள் தெரு என 7-31, 32 வரிகளில் கூறியிருப்பதைப் பார்த்தால் தொழிலுக்கேற்றவாறு மக்களின் குடியிருப்புகள் அக்காலத்தில் தனித்தனியாக அமைக்கப்பட்டுப் பாகுபடுத்தப்பட்டிருந்தன எனத் தெரிய வருகிறது.

முற்பிறவியில் செய்த வினைப்பயனாக இப்பிறவியில் நன்மையும், தீமையும் அனுபவிக்க வேண்டியிருக்கிறது. வினைப்பயனை யாரும் அனுபவித்தே தீர வேண்டும் என்ற கர்மசித்தாந்தத்தில் அக்கால மக்கள் மிக்க நம்பிக்கை கொண்டிருந்தனர் என்பதை மக்களின் அனுபவ வாயிலாக கவிகள் 11-134, 140, 21-70, 17-53, 13-57, 65; 11-92 ஆகிய பாடல்களில் தெளிவுபடுத்தி இருக்கிறார்கள். இந் நூல் தோன்றிச் சுமார் 400 ஆண்டுகள் கழித்துத் தோன்றிய ஆழ்வார்கள், நாயன்மார்கள் இப்பரிபாடலை அடிப்படையாகக் கொண்டே திவ்யப்பிரபந்தம், தேவாரம் போன்ற பக்தி நூல்களை இயற்றியனர் என்பதை அனைவரும் ஒருமுகமாக ஒப்புக் கொள்கிறார்கள். இதை மறுக்க ஓர் ஆதாரமும் இல்லை. 15-34, 38 வரிகளில் சங்கப்புலவர் திருமாலிருஞ்சோலை பற்றிக் கூறிய கருத்தை நம்மாழ்வார் தமது பாடலில் அப்படியே சொல்லுக்குச் சொல் கையாண்டிருப்பதையும் அதே போல் நாயன்மார்களுடைய பல பாடல்களில் பரிபாடல் கருத்துகள் பல அதே சொற்களோடு இடம் பெற்றிருப்பதையும் அறிஞர்கள் நன்கு அறிவார்கள்.

நக்கீரர் வேதம், தரும சாத்திரம், புராணம் ஆகிய எல்லா வடமொழி நூல்களையும் கற்றுணர்ந்தவர். அந்த நூல்களில் உள்ள கருத்துக்களை எல்லாம் தமது தமிழ் நூலில் கையாண்டு இரு மொழிகளுக்கும் ஓர் ஒற்றுமைப் பாலத்தை அமைப்பதில் கண்ணும் கருத்துமாக இருந்தவர். பல வடமொழி நூல்களின் கருத்துக்களை இவரது நூலில் ஆங்காங்கு காணலாம். எடுத்துக்காட்டாக:

பகவானை அடைய வேண்டிய வழியைக் கூறியிருக்கும் 'கடோபநிஷதம்' 8,9 மந்திரங்களின் கருத்துக்களைத் தமது நூலில் 62, 64 வரிகளில் அப்படியே மொழிபெயர்ப்பைப் போல விளக்கியிருக்கிறார்.

அந்தணர்களின் ஆறு தொழில்களையும், அவர்கள் 48 ஆண்டு பிரம்மச்சரிய விரதத்தைப் பூண்டு வேதாத்தியயனம் (மறையோதலை) செய்ய வேண்டும் என்ற வழியையும், முப்புரி நூலை அணிய வேண்டும் என்பதையும், நாள்தோறும் அம்மறையோர் செய்ய வேண்டிய முப்பெரு வேள்விபற்றியும், அந்தணர்களுக்கு 'இரு பிறப்பாளர்' என்னும் பெயர் ஏற்படுவதற்குக் காரணமான விஷயங்கள் பற்றியும் 176-189 வரிகளில் விளக்கியுள்ளார்.

இங்கு கௌதம தர்ம சூத்திரம், வேதம், தரும சாத்திரம், ஆகிய வடமொழி நூற் கருத்துக்களை அப்படியே ஆசிரியர் கையாண்டு விளக்கியுள்ளார்.

சூரபத்மவதம், பிரம்மனின் சாபத்தைத் தீர்ப்பதற்காகத் திருமால், சிவன், இந்திரன் 18 வேத கணங்கள் ஆக எல்லோருமாகச் சேர்ந்து முருகப் பெருமானிடம் செல்வது,

முப்புரம் எரித்தல், இந்திரன் 100 வேள்விகளைச் செய்து முடித்தல், முருகப் பெருமானின் பிறப்பு, பரமசிவனுக்கு முக்கண்ணன் என்ற பெயர் என்ற விதம் ஆகிய விஷயங்களைக் கூறுமிடங்களில் 'மகாபாரதம்', 'இராமாயணம்', பல புராணம் போன்ற வடமொழி நூல்களிலுள்ள கருத்துக்களை அப்படியே கையாண்டிருப்பதைக் காணலாம்.

நடைப்போக்கு, வடசொல் கலப்பு ஆகியவற்றைக் கொண்டு 11-ஆம் திருமுறையைச் சேர்ந்த 9 பிரபந்தங்களையும் பிற்காலத்தில் வாழ்ந்த 'நக்கீரர் தேவநயினார்' என்பவர் எழுதியிருக்கக் கூடும். கடைச்சங்கப் புலவரான நக்கீரர் எழுதியிருக்க முடியாது என்பது சில ஆராய்ச்சியாளர்களின் கருத்து.

## *திருக்குறளும் ஸம்ஸ்கிருத இலக்கியமும்*

### *வைதிகமதம்*

'வேதம், மறைமொழி, நிறைமொழி எனப் பெயர் பெற்று எவராலும் இயற்றப்படாமல் வெகு காலமாக பிரசாரத்தில் தொடர்ந்து இருந்து வருகிறது. ஜாதி நான்கு வகைப்பட்டது. ஆசிரமங்களும் நான்கு விதமாகப் பிரிக்கப்பட்டுள்ளன. முதல் வகுப்பைச் சேர்ந்த அந்தணர்கள் வேதத்தை ஓதியும் காத்தும் வருகின்றனர். அந்தணர் காக்கும் வேத வழி சென்று அரசன் நாட்டை ஆள வேண்டும். ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்டுவித்தல் தானம் செய்தல், தானம் வாங்குதல் போன்ற ஆறுவித தொழில்கள் அந்தணருக்கு வேதத்தால் வகுக்கப் பட்டிருக்கின்றன. அந்தணன் ஒழுக்கம் தவறக் கூடாது. கற்று மறந்த வேதத்தை அவன் மறுபடியும் பயின்று ஒரு வேளை உணர்ந்தாலும் உணரலாம்; ஒழுக்கம் தவறிய பிராமணனுக்கு பிராமணியம் மட்டும் மறுபடி கிட்டாது. நான்கு வகுப்பைச்

சார்ந்தவர்கள் நிறைந்திருக்கும் ஒரு நாட்டையே நாடு எனச் சொல்லலாம்'' என இக் கருத்துக்களைக் கொண்ட 133, 134, 543, 560, 741 போன்ற குறள்களால் வள்ளுவர் காலத்தில் வைதிக மதம் தமிழ் நாட்டில் பரவி இருந்தது என்றும், வள்ளுவரும் அதைப் பின்பற்றி வந்தார் என்றும் புலன் ஆகிறது.

தென்புலத்தார் என்றால் தென் திக்கில் வாழும் பித்ரு தேவதைகள் என்பது பொருள். 43-ஆவது குறளில் வரும் இச்சொல்லினால் வள்ளுவர் காலத்தில் பித்ரு தேவதைகளைக் குறித்து சிராத்தம் செய்யும் வழக்கம் இருந்து அதில் வள்ளுவர் நம்பிக்கை கொண்டிருந்தார் என்றும் தெரியவருகிறது. பறவை கூட்டை விட்டு வெளியேறிய பிறகு கூண்டிற்கும், பறவைக்கும் உள்ள உறவைப் போன்றது உடலுக்கும், உயிருக்கும் உள்ள உறவு என்ற கருத்துக் கொண்ட 338-ஆவது குறளினால் ஆன்மிகத்தில் வள்ளுவர் கொண்டிருந்த பற்று நன்கு புலனாகிறது. தீயில் ஹவிசைப் போட்டுச் செய்யும் ஆயிரம் யாகங்களைக் காட்டிலும் புலால் உண்ணாமையே அதிக பயனைத் தரவல்லது எனக்கூறும் 259-ஆவது குறள் அக் காலத்தில் யாகம் நடந்து வந்ததையும் அதனால் உண்டாகும் நற்பயனையும் நமக்கு எடுத்துக் காட்டுகிறது.

சம்ஸ்கிருத நூல்களில் உள்ள கருத்துக்களையோ சொற்களையோ வள்ளுவர் சிறிதளவும் எடுத்துக் கையாளவில்லை. தமிழக் கலாசாரத்தையே வள்ளுவர் இங்கு கூறுகிறார். தமிழ் கலாசாரம் வைதிக கலாசாரம் அன்று. அது தனிமை வாய்ந்தது எனக் கூறுவோரின் வாதத்தில் உண்மை சிறிதளவும் இல்லை என்பதை மேற்கூறிய பகுதியைப் படித்தவர்கள் நன்கு உணர்வார்கள்.

சங்க இலக்கியங்கள் வேத காலம் தொட்டு உள்ள ஸம்ஸ்கிருத நூல்கள் இவைகளுக்கிடையே உள்ள கருத்துக் கலாசார ஒற்றுமை ஆதாரங்களுடன் இதுவரை எடுத்துக் காட்டப்பட்டது. இவ்வாராய்ச்சி நூலில் ஸ்ரீமதாண்டவன் அருளிய பல அபூர்வமான நுணுக்கமான கருத்துக்கள் ஆங்காங்கு இடம் பெற்றிருக்கின்றன. உதாரணமாக சங்க நூல்களில் வைதிக கலாசாரம் என்ற தலைப்பில் அந்தணர் அதிகாலையில் வேதம் ஓதுதல், அந்தணர் அந்தியில் செய்யும் கடன் என்ற தலைப்புகளில் ஒரு பரிபாடலை உதாரணமாக எடுத்துக் காட்டியுள்ளேன். பரிபாடல் திரட்டு, அதிகப் பாடல்களாக பின்னே உள்ளவை என்று கூறி ஆண்டவன் ஸ்வாமிகள் ஒரு பாடலை எனக்கு எழுதி அனுப்பியுள்ளார்கள். இப்பாடல் எந்நூலிலும் இடம் பெறவில்லை. எனினும் ஸ்வாமிகள் அதை கண்டறிந்து எனக்கு அனுப்பியது வியப்பை அளிக்கிறது.

| | | | |
|---|---|---|---|
| மாயோன் | கொப்பூழ் | மலர்ந்த | தாமரைப் |
| பூவொடு | புரையும், | சீரூர்; | பூவின் |
| இதழகத் | தனைய | தெருவம்; | இதழகத்து |
| அரும்பொருட் | டனைத்தே | அண்ணல் | கோயில்; |
| தாதி | னனையர் | தண்டமிழ்க் | குடிகள்; |
| தாதுண்பற | வையனையர், | பரிசின் | வாழ்நர்; |
| பூவினுள் | பிறந்தோன் | நாவினில் | பிறந்த |
| நான்மறைக் | கேள்வி | நவில்குர | லெடுப்ப |
| ஏமவின் | துயி | லெழுத | லல்லதை, |
| வாழிய | வஞ்சியும் | கோழியும் | போலக் |
| கோழியி | னெழாதெம் | பேரூர் | துயிலே |

அதே போல் தொல்காப்பியம் பிறப்பியல் (102) 20-வது சூத்திரத்தில் உள்ள அளவிற் கோடல் அந்தணர் மறைத்தே

என்ற சூத்திரத்திற்கு பொருத்தமான இந்த வேதத்திலுள்ள* ஒரு பகுதியை வெகு புதிதாக எழுதி அனுப்பியுள்ளார்கள்.

*चत्वारि वाक् परिमिता पदानि
तानि विदु र्ब्राह्मणा ये मनीषिणः ।
गुहा त्रीणि निहिता नेङ्ग यन्ति
तुरीयं वाचो मनुष्या वदन्ति ॥
(परा-पश्यन्ती - मध्यमा - वैखरी)

இங்கு தொல்காப்பிய சூத்திரத்தோடு கருத்து ஒற்றுமை கொண்ட ஸம்ஸ்கிருதப் பகுதியை என்னால் எடுத்துக்காட்ட இயலவில்லை. ஸ்வாமிகள் இப்பகுதியை அனுப்பி இதற்கு நிறைவு செய்திருக்கிறார்கள்.

இப்படி எழுதிக் கொண்டே போனால் பல இடங்களில் ஸ்வாமிகளின் புதிய கருத்துக்கள் இடம் பெற்றிருப்பது அறிஞர்களுக்கு நன்கு விளங்கும். சுருங்கச் சொன்னால் இந்நூலை சுருத ப்ரகாசிகை என்றே சொல்லலாம்.

நடாதூர் அம்மாள் வம்சத்தில் பிறந்த அடியேனால் எழுதப்பட்டது இந்த சுருதப்ரகாசிகா. அன்று அடியேனுடைய கூடஸ்தரான நடாதூர் அம்மாளால் கூறப்பட்ட கருத்துக்களை கொண்டு சுதர்சன பட்டரால் எழுதப்பட்டது. இது தான் இரண்டு சுருத ப்ரகாசிகைகளுக்கு உள்ள வேறுபாடு. அடியேன் எழுதிய இந்த நூலை ஆண்டவன் ஸ்வாமிகள் கடாக்ஷத்திற்கு அனுப்பினேன். இதை உடனடியாக படித்து, இதை ஆசிரமத்தின் சார்பில் வெளியிடுவதென முடிவு செய்து அருளினார்கள்.

இங்கு ஆங்காங்கு பொருத்தமான சில திருத்தங்கள் செய்து இந்நூலுக்குப் பெருமை அளித்து இதற்கு ஒரு சிறப்பை தந்து மெருகூட்டிய ஸ்ரீரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன் ஸ்ரீரங்கராமானுஜ மஹாதேசிகன் ஸ்வாமிகளுடைய திருவடிகளில் எனது க்ருதஜ்ஞயை தெரிவித்துக் கொள்கிறேன்.

இப்புத்தகம் அச்சிட்டு வெளிவருவதற்கு உதவிய ஸ்ரீமான் புலிக்குன்றம் வங்கீபுரம் ஸ்தலசயனாசார்யர் ஸ்வாமிக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

D-5, டர்ன்புல்ஸ் ரோடு,
நந்தனம், சென்னை - 600 035
போன்: 2435 4246

இப்படிக்கு
S.N. ஸ்ரீ ராமதேசிகன்



***எஸ்.என். ஸ்ரீராமதேசிகனின் (21-6-1921)***
***60 ஆண்டு பன்முக கல்வித்தொண்டு***

## பதவிகள்

1. ஆராய்ச்சி மாணவன், ஸ்ரீ வெங்கடேச்வரா கீழ்த்திசை ஆராய்ச்சி நிறுவனம், திருப்பதி 1943 முதல் $2^1/_2$ ஆண்டுகள்.

   (ஆழ்வார்கள் பாசுரங்களில் சங்ககால இலக்கியச் செல்வாக்கைப் பற்றி ஆராய்ந்து கட்டுரை வரைதல்)

2. ஆராய்ச்சிப் புலவர், இந்திய அரசாங்கம், புது தில்லி - $2^1/_2$ ஆண்டுகள் (1961 முதல் 1963 வரை)

   ந்யாயபரிசிஷ்டம் என்ற அரியதொரு பழமையான தர்க்க சாஸ்திர நூல், புதியதொரு உரையுடன் பதிப்பிக்கப் பெற்று, ஆராய்ச்சி முறையில் எழுதிய முன்னுரையுடன் திருப்பதி கேந்திரிய ஸம்ஸ்க்ருத வித்யாபீடத்தின் வாயிலாக வெளியிடப்பட்டுள்ளது.)

3. பகுதி நேர விரிவுரையாளர் - (ஸம்ஸ்கிருதம்) - கிண்டி இன்ஜினீயரிங் கல்லூரி, அடிப்படை ஆராய்ச்சி பிரிவு - 4 ஆண்டுகள் (1965-1969)

(விஞ்ஞான நுணுக்கங்கள் அடங்கிய பழங்கால தர்க்க சாஸ்திர நூல்களை பொறியியல் கல்லூரி ஆசிரியர்களுக்கு விஞ்ஞான ரீதியில் போதித்து அக்கருத்துக்களை ஆராய்ச்சிக் கட்டுரையாக எழுதி, கிண்டி பொறியியல் கல்லூரி அடிப்படை ஆராய்ச்சி நிறுவனத்தின் மூலம் அச்சிட்டு வெளியிடுதல்)

4. ஆராய்ச்சி அலுவலர் - கேந்திரீய ஸம்ஸ்க்ருத வித்யா பீடம் - திருப்பதி - இது ஒரு இந்திய அரசாங்க நிறுவனம், இன்று ஸம்ஸ்கிருத பல்கலைக்கழகம் $3^1/_2$ ஆண்டுகள் (1972 - 1975)

(சங்ககாலம் தொடங்கி 20வது நூற்றாண்டு வரையிலுள்ள தமிழ் நூல்களையும் வேதகாலம் தொடங்கி இன்று வரையாக உள்ள வடமொழி நூல்களையும் ஒப்பிட்டுப் பார்த்து ஆராய்ந்து ஒன்றோடொன்று கருத்தொற்றுமை கொண்டு இரு கண்கள் போல் இயங்கி வரும் நிலையைப் பற்றி 1000 பக்கங்களில் ஆராய்ச்சிக் கட்டுரை தயார் செய்தல்).

5. கௌரவ ஆசிரியர் - தஞ்சாவூர் சரஸ்வதி மஹால் நூலகம்- 1980

(மஹாபாரதக் கதையின் சுருக்கத்தை விளக்கும் பிராஸ பாரதம் என்னும் வடமொழி நூலின் தமிழாக்கம். இந்நூல் நூலகத்தின் வாயிலாக வெளியிடப்பட்டது).

6. கௌரவ ஆராய்ச்சி செயலாளர் - தமிழ்-ஸம்ஸ்கிருதம் மற்றும் பிற மொழி ஆராய்ச்சி நிறுவனம், சென்னை- 1975 - 1981.

(வெகுநாட்களாக தமிழ், ஸம்ஸ்கிருத மொழிகளுக் கிடையே இருந்த சர்ச்சைக்குரிய சில கருத்து

வேறுபாடுகளை அகற்றி இரு மொழியாளர்களுக்கும், இரு மொழிகளுக்கும் இடையே ஒற்றுமை காண முறையே சென்னை கவர்னர் கே.கே.ஷா, பிரபுதாஸ் பட்வாரி, மோகன்லால் சுகாடியா ஆகியவர்களைத் தலைவர்களாகக் கொண்ட இந்நிறுவனத்தின் கௌரவ ஆராய்ச்சி அலுவலராக இருந்து பல அறிஞர்கள் எழுதிய ஆராய்ச்சிக் கட்டுரை அடங்கிய ஒரு தொகுப்பை வெளியிடுதல், பல்துறைகளில் புகழ்பெற்ற பல அறிஞர்களைக் கொண்ட பல துணைக் கமிட்டிகளை அமைத்து கருத்தரங்கு மாநாடுகளை நடத்தி இருமொழிகளுக்கும் பாலம் அமைத்து தொண்டாற்றி வருதல்).

7. கௌரவத் தனி அலுவலர் - ஆயுர்வேத மொழி பெயர்ப்புப் பிரிவு, இந்திய மருத்துவம் மற்றும் ஓமியோபதி இயக்குநரகம், தமிழக அரசு, சென்னை. 1983 முதல் 1996 வரை.

   (13 ஆண்டு காலமாக பழம்பெரும் ஸம்ஸ்கிருத மொழியிலுள்ள ஆயுர்வேத நூல்களை தமிழாக்கம் செய்து, விஞ்ஞான உலகில் இன்று காணப்படும் அரிய நவீன விஞ்ஞான நுணுக்கங்களை விளக்கி பல மூலிகைப் படங்களையும் இணைத்து தயாரித்த நூல், தமிழக அரசின் வாயிலாக ஐந்து பகுதிகளாக அச்சிட்டு வெளியாகிருக்கிறது.)

8. உதவி ஆசிரியர் - 'அனுமான்' தமிழ் வாரப்பதிப்பு- 1950

9. சரஸ்வதி கிரி வேத ஸம்ஸ்கிருத பாடசாலையின் தலைவராக இருந்து இலவச ஸம்ஸ்கிருத வகுப்புகளை நடத்தி பல ஸம்ஸ்கிருத பரீட்சைகளுக்கு மாணவர்களை அனுப்பி தொண்டாற்றியுள்ளார். (1973-1986)

10. கௌரவ ஆலோசகர் - சென்னை அரசு கீழ்த்திசை ஓலைச்சுவடி நூலகம், சென்னை, (1988) ஓர் ஆண்டு. (வெகு காலமாக அச்சேறாமல் ஓலைச்சுவடி வடிவத்திலுள்ள தமிழ் ஸம்ஸ்கிருத மொழி நூல்களை அச்சிடுவதற்கு ஏற்றவாறு பதிப்பித்து அச்சிட திட்டம் வகுத்து அளித்தல்).

11. 1940 முதல் இன்று வரை எழுத்தாளராக இருந்து, பல ஆங்கில, தமிழ் தினசரி, வாரப் பத்திரிகைகளி ஆராய்ச்சிக் கட்டுரை, புத்தக விமர்சனம் எழுதி வருதல்.

12. ஸ்தாபகர் செயலர் - தென்னிந்திய ஸம்ஸ்கிருத சங்கம், சென்னை, 1950 முதல் இன்று வரை.

(1950 முதல் இன்று வரை இச்சங்கத்தின் வாயிலாக பல இலவச ஸம்ஸ்கிருத வகுப்புகள் பல மகாநாடுகள், ஆராய்ச்சி அரங்கங்கள், அறக்கட்டளை சொற்பொழிவுகள் ஆகியவற்றை நடத்தி ஸம்ஸ்கிருத மொழிக்குத் திரண்டு புரிதல்)

## *பாராட்டுகள்*

1. ஸம்ஸ்கிருத புலமைக்காக இந்திய ஜனாதிபதி வழங்கிய பாராட்டு-1971.

2. உத்தரப்பிரதேச அரசு, அவ்வையார் ஸம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு நூலுக்குப் பரிசு அளித்தல் -1973.

3. தமிழக அரசு, மொழி பெயர்ப்புப் பணிக்காக வள்ளுவர் விழாவில் பொன்னாடை அளித்து கௌரவித்தல்-1986.

4. சரகஸம்ஹிதை மொழி பெயர்ப்புப் பணிக்காக இந்திய மருத்துவ ஓமியோபதி இயக்குநரகம், சால்வை அளித்து கௌரவித்தல் - 1988.

5. சென்னை பல்கலைக் கழகத்தில் பி.யு.சி சிறப்பு ஸம்ஸ்கிருத தேர்வுக்கு அவ்வையார் ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூல் பாடப்புத்தகமாக வைக்கப்பட்டது. (1973 முதல்)

6. தமிழ் எழுத்தாளர் சங்கம், சென்னை- பொற்பதக்கம் அளித்து கௌரவித்தல் -1969

7. காரைக்குடி கம்பன் கழகம், பொன்னாடை போர்த்தி கௌரவித்தல் -1965

8. சென்னை பாரதியார் சங்கம் கேடயம் அளித்துக் கௌரவித்தல் -1963.

9. சுகர் மார்கண்டேயர் ஆராய்ச்சி மையத்தின் சார்பில் சென்னையில் நடந்த தன்வந்திரி விழாவில் அமிர்த கலசம் (வெள்ளிக் கோப்பை) அளித்துப் பாராட்டப்படுதல். (7-3-97)

10. சென்னை அரசு ப்ளஸ் ஒன்று தேர்வுக்கு திருக்குறள், பாரதியார், ஔவையார் சமஸ்கிருத மொழி பெயர்ப்பு நூல்களிலிருந்து சில சுலோகங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு பாட நூலாக வைக்கப்பட்டுள்ளன- 1996 முதல்.

11. ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் எஸ்.என். ஸ்ரீராமதேசிகன் அவர்களுக்கு "ஆயுர் வேத பாரதீ" என்ற பட்டத்தை காஞ்சி சங்கர மடத்தில் நடந்த விழாவில் 20.6.1999 அன்று வழங்கினார்கள்.

12. இலக்கியச் சங்கம் ஸம்ஸ்கிருத ரத்னா என்ற பட்டம் வழங்கி கௌரவித்தல் - 1970.

13. தமிழக அரசு - கலைமாமணி பட்டம் அளிதபுது கௌரவித்தல் - 1993 மார்ச்சு.

14. [illegible]
மஹாதேசிகன் ஸ்வாமிகள், எஸ், என். ஸ்ரீராமதேசிகனுக்கு 'அபிநவ விசுருத ஸுசுருத' என்ற பட்டத்தை சென்னை ஆண்டவன் ஆஸ்ரமத்தில் 2.4.2000 அன்று நடந்த விழாவில் வழங்கினார்கள்.

15. 16.12.2001 அன்று பார்த்தசாரதி ஸ்வாமி சங்கீத சபா இசை விழாவில் அஹோபிலமடம் ஜீயர் அவர்களால் பரத நாட்டிய சாஸ்திர நூலை தமிழில் மொழி பெயர்த்ததற்காக பொன்னாடைப் போர்த்தி நினைவுப் பரிசு வழங்கி கௌரவிக்கப்பட்டார்.

16. 2.6.2003 அன்று ஸ்ரீமத் ஆண்டவன் ஸ்வாமியின் 69-வது திருநக்ஷத்ர விழாவில் ஆசிரியருக்கு விவிதக்ரந்த நிர்மான நிபுணஹ என்ற பட்டத்தை அளித்து, வெள்ளி கிண்டியும் ரூ.5000/-ம் வழங்கி அருளினார்கள்.

## வெளியீடுகள்

1. அஷ்டாங்கசங்கிரகம், சரகஸம்ஹிதா, ஸுசுருத சம்ஹிதா ஆகிய 25,000 சுலோகங்கள் கொண்ட வடமொழி ஆயுர் வேத நூல்கள் தமிழாக்கம் செய்யப்பட்டு தமிழக அரசு ஆறு பகுதிகளாக 6400 பக்கங்களில் வெளியிடப் பட்டுள்ளன.

2. பரத முனிவரால் எழுதப்பெற்ற 6000 சுலோகங்கள் 36 அத்தியாயங்கள் கொண்ட 'பரத நாட்டிய சாஸ்திரம்' என்ற ஸம்ஸ்கிருத நூல் தமிழாக்கம் செய்யப்பட்டு உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனத்தின் வாயிலாக வெளியிடப் பட்டுள்ளது. இம்மொழி பெயர்ப்பு பணிக்காக தமிழக முதல்வர் ஜெயலலிதா அவர்கள் 1995-ம் ஆண்டு ரூ.50,000/- சன்மானமாக அளித்தார்கள்.

3. திருக்குறள், ஸம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு தமிழ் ஆங்கிலவிளக்க உரையுடன்.

4. நாலடியார், ஸம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு தமிழ் ஆங்கில விளக்க உரையுடன்.

5. சுப்பிரமணிய பாரதியார் நூல்களின் ஸம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு, ஆங்கில உரையுடன்.

6. பத்துப்பாட்டு, (சங்க இலக்கியம், திருமுருகாற்றுப்படை, முல்லைப்பாட்டு) ஸம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.

7. எட்டுத் தொகை, (சங்க இலக்கியம் - பரிபாடல்) ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு.

8. கம்பராமாயணம், (பாலகாண்டம்) ஸம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு

9. சிலப்பதிகாரம் - ஸம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.

10. அவ்வையார் நீதி நூல்கள் - ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு

11. ஆந்திரகவி வேமனாவின் பாடல்கள், ஸம்ஸ்கிருத, தமிழ்மொழி பெயர்ப்புகளுடன்.

12. ஏழு நாடகக் கதைகள் - (ஏழு ஸம்ஸ்கிருத நாடகங்களின் கதைச் சுருக்கம்) தமிழில்.

13. ஸ்ரீ கிருஷ்ண லீலா - ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மாவின் சரிதம் - குழந்தைப்பருவம் முதல்- தமிழ்.

14. இரு மொழி இலக்கிய இன்பம் - (ஆராய்ச்சிக் கட்டுரைகளின் தொகுப்பு) தமிழ்.

15. மகாபாரதத்தை இயற்றியவர் யார்? (ஓர் ஆராய்ச்சிக் கட்டுரை) தமிழ்

16. கிருஷ்ண கதா சங்கிரகா – (ஸம்ஸ்கிருத சுலோகங்கள்)

17. தேசிகமணி சதகம் – (வேதாந்த தேசிகரின் வாழ்க்கை வரலாறு) - ஸம்ஸ்கிருத சுலோகங்கள்.

18. திருப்பாவை – ஸம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.

## *பாராட்டியவர்கள்*

ஜனாதிபதி

இரண்டு உபஜனாதிபதிகள்

மூதறிஞர் இராஜாஜி

பாரதப் பிரதமர்

ஒன்பது கவர்னர்கள்

மூன்று தமிழக முதல்வர்கள்

மூன்று மத்திய மந்திரிகள்

நான்கு நீதபதிகள்

ஐந்து துணைவேந்தர்கள்

நான்கு மடாதிபதிகள்

இரண்டு மத்திய சாஹித்திய அகாடமித் தலைவர்கள்

மூன்று மாகாண அரசுகள்

தமிழக கவர்னர் திரு.கே.கே.ஷா அவர்களுடைய தலைமையில் ஜனாதிபதி கதிரு.வி.வி.கிரி அவர்கள் இவருடைய நூலை வெளியிட்டிருப்பதும், கவர்னர் திரு.பிரபுதாஸ் பட்வாரி அவர்களின் தலைமையில் பாரதப் பிரதமர் திரு.மொரார்ஜி தேசாய் அவர்கள் இவருடைய நூலை வெளியிட்டிருப்பதும் குறிப்பிடத்தக்க அம்சமாகும்.

# நூலாசிரியரைப் பற்றி...



எஸ்.என்.ஸ்ரீராமதேசிகன்
பிறப்பு: 21-06-1921

83- எண்பத்திமூன்று வயதை கடக்கும் இவர் திருப்பதி வெங்கடேஸ்வரா ஸம்ஸ்க்ருதக் கல்லூரியில் 1942-ல் சிரோமணி பட்டம் பெற்றார். அங்கு வெங்கடேஸ்வரா கீழ்திசை ஆராய்ச்சி நிறுவனத்தில் $2^1/_2$ ஆண்டு காலம் ஆராய்ச்சி யாளராகப் பணியாற்றினார். அப்பொழுதே எல்லா தமிழ் ஆங்கில தினசரி வாரப் பத்திரிகைகளில் கட்டுரை எழுதத் தொடங்கி, அறுபதாண்டு காலம் எழுத்தாள ராக விளங்குகிறார். 1946ல் சென்னைக்கு வந்து சங்க இலக்கியம் முதல் தமிழ் நூல்களை யெல்லாம் சம்ஸ்க்ருதத்தில் மொழி பெயர்த்து தமிழ், ஆங்கில கருத்துரையுடன் வெளியிட்டுள்ளார். 1965 முதல் சென்னையில் கிண்டி பொறியியல் கல்லூரியில் சம்ஸ்க்ருத பகுதிநேர விரிவுரை யாளராக 4 ஆண்டு இருந்து ஆசிரியர்களுக்கு விஞ்ஞான அடிப்படையில் ஸம்ஸ்க்ருதம் கற்பித்து வந்தார். அக்கருத்துக்கள் நூல் வடிவில் வெளிவந்துள்ளன.

1961-ம் ஆண்டு முதல் $2^1/_2$ ஆண்டு காலம் இந்திய அரசாங்கத்தில் ஆராய்ச்சிப் புலவராகப் பணியாற்றி தர்க்க சாஸ்திர நூலை பதிப்பித்து அளித்துள்ளார். 1971ம் ஆண்டு சம்ஸ்க்ருத புலமைக்காக ஜனாதிபதியின் பாராட்டைப் பெற்றார். 1972 முதல் $3^1/_2$ ஆண்டு காலம் திருப்பதியிலுள்ள கேந்திரிய சம்ஸ்க்ருத வித்யா பீடத்தில் (இன்று அது சம்ஸ்க்ருத பல்கலைக் கழகம்) ஆராய்ச்சி அலுவலராக பணியாற்றி தமிழ் சம்ஸ்க்ருத மொழிகளின் இடையே உள்ள ஒற்றுமையை ஆராய்ந்து ஆயிரம் பக்கங்களில் ஒரு ஆராய்ச்சி நூலை எழுதி அளித்துள்ளார்.

K.K.Shah கவர்னர் தலைமையில் இயங்கிய தமிழ் சமஸ்க்ருதம் மற்றும் பிறமொழி ஆராய்ச்சி நிறுவனத்தில் 1975 முதல் 1981 வரை கௌரவ ஆராய்ச்சிச் செயலராக இருந்து தொடர்ந்து நான்கு கவர்னர்கள் தலைமையில் பணியாற்றி வந்தார். சென்னை ஸரஸ்வதிகிரி வேத சம்ஸ்க்ருத கலாசாலையின் தலைவராக 1973 முதல் 1986 வரை இருந்து வந்துள்ளார். 1980வது ஆண்டு தஞ்சை ஸரஸ்வதி மஹால் நூலகத்தில் கௌரவ ஆசிரியராக ஓராண்டு காலம் பணி செய்ததோடு அதே ஆண்டில் 'அனுமான்' என்ற தமிழ் வாரப்பத்திரிக்கையில் உதவி ஆசிரியராகவும் இருந்து வந்துள்ளார். தமிழக அரசின் இந்திய மருத்துவம் மற்றும் ஹோமியோபதி இயக்குநரகத்தில் ஆயுர்வேத மொழி பெயர்ப்பு பிரிவில் கௌரவத் தனி அலுவராக 1983 முதல் 1996 வரை 13 ஆண்டு காலம் இருந்து சரக சம்ஹிதா, ஸுச்ருத சம்ஹிதா போன்ற ஸம்ஸ்கிருதத்திலுள்ள ஆயுர்வேத நூல்கள் இவரால் தமிழில்

மொழிபெயர்க்கப்பட்டு 6500 பக்கங்களில் ஆறு பகுதிகளாக தமிழக அரசால் அச்சிட்டு வெளியிடப் பட்டுள்ளன.

அரசு கீழ்த்திசை ஓலைச்சுவடி நூலகத்தில் கௌரவ ஆலோசகராக 1988ல் ஓராண்டு காலம் பணியாற்றியுள்ளார். இவர் சம்ஸ்க்ருதத்திலிருந்து தமிழில் மொழி பெயர்த்த பரதநாட்ய சாஸ்திரம் என்ற நூலை உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம் வெளியிட்டதோடு அதற்காக இவருக்கு ரூ.50,000 தமிழக முதல்வர் ஜெயலலிதா அவர்கள் 1995ம் ஆண்டு அளித்துப் பாராட்டினார். இவர் தமிழிலிருந்து சம்ஸ்க்ருதத்தில் மொழி பெயர்த்த பல நூல்களை ராஜாஜி, ஜனாதிபதி V.V.கிரி, பாரத பிரதமர் மொரார்ஜி தேசாய், ஆகியோர் வெளியிட்டுள்ளார். காஞ்சி, சிருங்கேரி சங்கராச்சாரியர்கள், அஹோபிலமடம் ஜீயர், ஸ்ரீரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன் ஸ்வாமிகள், எம்.ஜி.ஆர், ஜெயலலிதா ஆகியோர்களின் பாராட்டைப் பெற்றார். காஞ்சி சங்கராச்சாரியார் இவருக்கு ஆயுர்வேத பாரதி என்ற விருதையும், ஸ்ரீரங்கம், ஸ்ரீமத் ஆண்டவன் ஸ்வாமிகள் அபிநவ விச்ருதா ஸம்ஸ்ருத என்ற விருதையும் அளித்தனர்.

1993ம் ஆண்டு தமிழக அரசு இவருக்கு 'கலைமாமணி' பட்டம் அளித்துள்ளது. இலக்கியம், மருத்துவம், ஆன்மிகம், கலை, பொறியியல் இத்துறைகளில் ஆசிரியர் ஆராய்ச்சி செய்து பல நூல்களை எழுதியுள்ளார். தமிழ் எழுத்தாளர் சங்கம், காரைக்குடி கம்பன் கழகம், சென்னை பாரதியார் சங்கம், ராமலிங்கா பணிமன்றம் திருவள்ளுவர் விழாவில் தமிழக அரசு ஆகியவைகளிடமிருந்து இவர் பாராட்டு, கேடயம், பதக்கம் ஆகியவைகளைப் பெற்றுள்ளார். இவருடைய ஔவையார் ஸம்ஸ்க்ருத மொழி பெயர்ப்பு நூல் உத்தரப்பிரதேச அரசின் பரிசைப் பெற்றுள்ளது.

பாரத பிரதமர், ஜனாதிபதி, ராஜாஜி, ஒன்பது கவர்னர்கள், மூன்று தமிழக முதல்வர்கள், மூன்று மத்திய மந்திரிகள், நான்கு உயர்நீதி மன்ற நீதிபதிகள், ஐந்து துணை வேந்தர்கள், நான்கு மடாதிபதிகள், மூன்று மாகாண அரசுகள் என இவர்களால் பாராட்டப் பெற்றவர்.

ஸ்ரீ அஹோபில மட பத்ரிகை "ஸ்ரீ ந்ருஸிம்ஹப்ரியா", ஆண்டவன் ஆச்ரம பத்ரிகை, "தேசிக ஸ்ரீஸூக்தி சம்ரக்ஷணி" போன்ற பத்ரிகைகளில் 1994லேயே ஆன்மீக கட்டுரைகள் எழுதி வந்தார். அவைகள் திருப்பாவை சம்ஸ்க்ருத ஸ்லோகம், "தேசிக மணி சதகம்" என்ற பெயரில் நூல் வடிவில் வெளிவந்துள்ளன.

திருப்பாவை, திருக்குறள், நாலடியார், சுப்ரமண்ய பாரதி நூல்கள், கம்பராமாயணம், சிலப்பதிகாரம், ஔவையார், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, ஆகிய தமிழ் நூல்களை சமஸ்க்ருதத்தில் மொழி பெயர்த்து சிலவற்றிற்கு ஆங்கில, தமிழ் உரையுடன் இவர் வெளியிட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. இவருடைய ஔவையார் சம்ஸ்க்ருத மொழி பெயர்ப்பு P.U.C.சிறப்பு ஸம்ஸ்க்ருத பாட நூலாக 73வது ஆண்டு வைக்கப்பட்டுள்ளது. ஜனாதிபதி பாராட்டையும் பெற்றவர்.



ஸ்ரீரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன் ஸ்ரீரங்கராமாநுஜ
மஹாதேசிகன் ஸ்வாமிகள்,
எஸ்.என். ஸ்ரீராமதேசிகனுக்கு
'அபிநவ விசுருதா ஸுசுருத' என்ற பட்டத்தை
சென்னை ஆண்டவன் ஆஸ்ரமத்தில்
2.4.2000 அன்று நடந்த விழாவில்
வழங்கினார்கள்



*12-06-2002* அன்று ஸ்ரீமத் ஆண்டவன் ஸ்வாமிகளின் 68-வது திருநக்ஷத்ர மஹோத்ஸவத்தில் ஆசிரியருடைய ''ஸுச்ருத ஸம்ஹிதை'' என்கிற தமிழாக்க நூலை வெளியிட்டு ரூ.15,000/-சம்பாவனை வழங்கி சிறப்பித்தார்கள்.



02-06-2003 அன்று ஸ்ரீமத் ஆண்டவன் ஸ்வாமிகளின் 69-வது திருநக்ஷத்ர மஹோத்ஸவத்தில் ஆசிரியருக்கு விவித க்ரந்த நிர்மான நிபுணஹ என்ற விருதை அளித்து அனுக்ரஹித்தார்கள்.

# संघग्रन्थेषु वैदिककलाचारः

## சங்க நூல்களில்
## வைதிக கலாசாரம்

# विषयसूचिका

# I

# धर्मशास्त्रार्थानां तोल्काप्पिय ग्रन्थे समन्वयः

अधीत सकल धर्म शास्त्रः तोल्काप्पियर् कविः जनानां धर्मशास्त्रार्थ परिज्ञानार्थं मनुस्मृति, बोधायनस्मृति, गौतमधर्म सूत्रादि ग्रन्थ प्रतिपादनात् दैनन्दिनं जनानामनुष्ठानोपयोग भूतान् नानाधर्म-शास्त्रार्थान् स्वीयव्याकरणग्रन्थे सुविशदं प्रतिपादयति । प्रायशस्तत्कालीन कवयो न केवलं श्रृङ्गारादिरस प्रतिपादककाव्य-निर्माणमात्रपराः, किन्तु जनानामतीवोपयुक्तान् धर्मशास्त्र प्रतिपादि-तान् नानाविधाचारान् निरूप्य तत्र जनानां प्रवृत्तिमुत्पाद्य यथा ते कर्मभ्रष्टा न भवेयुः, सदाचारशीलाश्च भवेयुस्तथाकरणे विशेषतस्ते बद्धश्रद्धा आसन् ।

द्रविडदेशे जना विशेषतो धर्मशास्त्रमार्गावलम्बिनो सदाचार-शीलाश्च आसन्नितीदं एतादृशग्रन्थपठनात् स्पष्टमवगम्यते ।

किञ्च, पूर्वं प्रायशस्सङ्घकालीन द्रविडकवयो द्रविडव्याकरण-ग्रन्थ कर्तारश्च संस्कृतग्रन्थान् समग्रानप्यधीत्य ततोऽपूर्वान् कांश्चन विषयान् स्वीयग्रन्थेषु प्रतिपादितवन्तः । अनेन सर्वेऽपि कवयः सकल भाषा पाण्डित्यवन्त आसन्नित्यवगम्यते । भाषान्तरपरिज्ञानं स्वीयभाषापाण्डित्याभिघातकं सर्वथा न भवति । अपि तु पोषकमेव भवति । एवं भाषान्तरोक्तानामपूर्वार्थानां स्वीयग्रन्थेषु कथनं नाप्यगौरवावहम् ।

अयं सिद्धान्तःसङ्घकालीनकविभि र्विशेषत आदृतः । सङ्घकालीन द्रविड ग्रन्थानां परामर्शेनेदमवगन्तुं पार्यते ।

# 1. तोल्काप्पियग्रन्थे वर्णाश्रमधर्म व्यवस्था निरूपणम् ।

ब्राह्मणक्षत्रियवैश्य शूद्राख्य चतुर्विध वर्णानां, ब्रह्मचारि, गृहस्थ, वानप्रस्थ भिक्षु, संज्ञकानां चतुर्विधाश्रमाणां च व्यवस्था महर्षिभिः धर्मशास्त्रग्रन्थेषु कृता, जनैरादृतार्थाभूत, इतीदं सुप्रसिद्धम् ।

मनुस्मृतौ प्रथमाध्याये –

अध्यापनमध्ययनं यजनं याजनं तथा ।
दानं प्रतिग्रहं चैव ब्राह्मणानामकल्पयत् ।। (१-८८)

प्रजानां रक्षणं दानमिज्याध्ययनमेव च ।
विषयेष्वप्रसक्तिश्च क्षत्रियस्य समासतः (१-८९)

पशूनां रक्षणं दानमिज्याध्ययनमेव च ।
वणिक्पथं कुसीदं च वैश्यस्य कृषिमेव च (१-९०)

एकमेव तु शूद्रस्य प्रभु-कर्म समादिशत् ।
एतेषामेव वर्णानां शुश्रूषामनसूयया ।। (१-९१)

एभिः श्लोकैः यजन, याजन, अध्ययन; अध्यापन, दान, प्रतिग्रह षट्कर्माणि ब्राह्मणानां, यजनं, अध्ययनं, दानं, प्रजारक्षणं, न्यायतो दण्डप्रदानं चेति पञ्चकर्माणि राज्ञां– यजनं, अध्ययनं, दानं, वाणिज्यं, कृषि, पशुरक्षणं चेति षट् कर्माणि वैश्यशूद्रयोश्च कर्तव्यत्वेन विहितानि ।

एवमेव गौतम धर्मसूत्रे द्वितीयप्रश्ने प्रथमाध्याये :-

"द्विजादीनामध्ययनमिज्या दानम् ॥"

"ब्राह्मणस्याधिकाः प्रवचन याजन प्रतिग्रहाः" ॥

"राज्ञोऽधिकं रक्षणं सर्व भूतानाम्," "न्यायदण्डत्वम्" ॥

"वैश्यस्याधिकं कृषिवाणिक् पाशुपाल्यं कुसीदम्" ॥ ५० ॥

"शूद्रश्चतुर्थो वर्ण एकजाति ॥" ॥५१॥

एतैः सूत्रैः अनेनैव प्रकारेण चतुर्णांमपि वर्णानां कर्तव्यकर्माणि विशिष्य विहितानि । ग्रन्तद्वयमेनं मनसि कृत्वा तोल्काप्पियर् कविः புறத்திணை இயல் (पुरत्तिणै इयल्) प्रकरणे-

அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்
ஐவகைமரபின் அரசர் பக்கமும்
இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்
மறுஇல் செய்தி மூவகைக் காலமும்
நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும்
நால் இருவழக்கில் தாபகப் பக்கமும் (सू-१६)

आदौ त्रिभिर्वाक्यैः षट्कर्मपराः ब्राह्मणाः, पञ्चकर्मपराः राजानः, षट्कर्मपरौ वैश्यशूद्रौ । इति मुक्तकण्ठं

कविरत्र मनुस्मृतिप्रतिपाद्यमर्थं गौतमधर्मसूत्रार्थं च तथैव निरूपयति । द्रविड सूत्रमेतत् मनुधर्मसूत्रयोरनुवादरूप मित्येव सुस्पष्टं भायात् ।

कुटीचक, बहूदक, हंस, परमहंस, संज्ञकानां चतुर्विध सन्यासिनां लक्षणकथनावसरे हारीतस्मृतौ -

'गृह्णीयात् सततं विद्वान् पात्रं चैव कमण्डलुम् ।

आसनं दारवं प्रोक्तं स्वहस्त चतुरङ्गुलम् ।।

शिखायज्ञोपवीतस्स्यात् देवताराधनं चरेत् ।।

इति श्लोकैः यज्ञोपवीत, कमण्डलु, त्रिदण्ड, पीठादि संपन्नः कुटीचकसन्यासी इति कुटीचक सन्यासि लक्षणं कथ्यते । अमुमर्थं मनसि कृत्वा, மரபியல் (मरभियल) प्रकरणे

''நூலேகரகம் முக்கோல் மணையே
ஆயுங்காலை அந்தணர்க்குரிய'' (ஸூ -71)

इति ब्राह्मण लक्षणप्रतिपादके द्रविडसूत्रे तथैव हारीत स्मृत्यर्थं स्मारयन् अनुवदति कविः । हारीतस्मृतौ सन्यासि विशेषस्योक्तं लक्षणं अत्र ब्राह्मण सामान्य लक्षणत्वेन द्रविडकविः कथयति अनन्तरंः -

படையுங் கொடியுங் குடியும், முரசும்
நடைநவில் புரவியும், களிறுந்தேரும்
தாரும், முடியும் நேர்வன பிறவும்
தெரிவுகொள் செங்கோல் அரசர்க்குரிய (ஸூ -72)

राज्ञां लक्षणं,

வைசிகன் பெறுமே வாணிக வாழ்க்கை (ஸூ -78)

इति वैश्य लक्षणं,

வேளாண் மாந்தர்க்கு உழுதூண் அல்லது,
இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி (ஸூ -81)

इति ८१ सूत्रे शूद्रलक्षणञ्च क्रमेण तोलकाप्पियर् कवि र्वदति ।अत्र प्रतिपादितं चतुर्विधवर्ण लक्षणं सर्वात्मना स्मृति धर्मशास्त्रादिपर्यालोचनपूर्वकं कथितमिति सर्वेऽपि जानन्त्येव ।

तोल्काप्पियग्रन्थे அந்தணர் 73 அரசர் 72 வைசிகன் 78 வேளாளன் 81 इति चतुर्विधवर्णानामपि नामनिर्देशपूर्वकं तेषां लक्षणकथनेन तोल्काप्पियकाले द्रविडदेशे चतुर्विधवर्ण व्यवस्था कृता । जनास्सर्वेऽपि चतुर्धा विभक्ताः सन्तो ब्राह्मणक्षत्रियवैश्य शुद्रशब्दवाच्या अभूवन्निति चानेन जानीमः ।

जनाः स्वीय वर्ण धर्मान् परित्यज्य वर्णान्तर धर्मपरा यदि भवेयुः ते स्ववर्णात् पातिता भवन्ति इति मनुस्मृतौ दशमाध्याये-

वरं स्वधर्मो विगुणो न पारक्य स्वनुष्ठितः

परधर्मेण जीवन्ति सद्यः पतति जातितः । (९७)

इत्यनेन श्लोकेन कथितममुमर्थं,

மரபியல் (मरभियल्) प्रकरणेः-

அன்னராயினும் இழிந்தோர்க்கு இல்லை- सू-८५

इत्यस्मिन् सूत्रे तोल्काप्पियर् कविस्तथैव निरूपयति ।

ग्रन्थस्य पठितृणाम् अत्र विद्यमानं साम्यं सुस्पष्टं ज्ञातं भवेत् । एवमेव चतुर्विधाश्रमलक्षण कथन प्रकरणे "सर्वान् भोगाननुभूय सकलभोगपदार्थानपि परित्यज्य विरक्तो भूत्वा भार्यां पुत्रेषु निक्षिप्य

अथवा सह नीत्वा अरण्ये कृतवासो नियतेन्द्रियो यो भवति स एव वानप्रस्थ शब्दवाच्यः'' इति मनुस्मृतौ षष्ठाध्याये

संत्यज्य ग्राम्यमाहारं सर्व चैव परिच्छदम् ।
पुत्रेषु भार्यां निक्षिप्य वनं गच्छेत् सहैव वा ।। (३)

अग्निहोत्रं समादाय गुह्यं चाग्नि परिच्छदम्
ग्रामादरण्यं निःसृत्य निवसेन्नियतेन्द्रियः ।। (४)

इत्येताभ्यां श्लोकाभ्यामुक्तं वानप्रस्थ लक्षणं तोल्काप्पियग्रन्थे கற்பியல் (कर्पियल्) प्रकरणे:-

காமஞ்சான்ற கடைக் கோட்காலை
ஏமஞ்சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே

(ஸூ-51)

पूर्वोक्त सूत्रे द्रविडकविस्तथैव निरूपयति । तथा புறத்திணை யியல் प्रकरणे அருளொடுபுணர்ந்த அகற்சியானும்(ஸூ-17)
நாலிருவழக்கிற்றாபதப் பக்கமும் (புறத்-16)

इति वाक्याभ्यां सन्यासाश्रमस्वरूपं स्मारयति ।।

## 2. धर्मशास्त्रोक्त अष्टविधविवाहानां तोल्काप्पिय ग्रन्थे निरूपणम् ।

वेदाध्ययनानन्तरं गार्हस्थ्य संपादनार्थं ब्रह्मचारिणो अष्टाविध विवाहाः विहिताः । ते च क्रमेण ब्राह्मः प्राजापत्यः आर्षः दैवः, गान्धर्वः, आसुरः, राक्षसः, पैशाचः, इति क्रमेण एतत् संज्ञका भवन्ति । मनुस्मृतौ तृतीयाध्याये-

चतुर्णामपि वर्णानां प्रेत्य चेह हिताहितान् ।
अष्टाविमान्समासेन स्त्रीविवाहान्निबोधत ।।२०।।

ब्राह्मो दैवस्तथैवार्षः प्राजापत्यस्तथाऽऽसुरः ।
गान्धर्वो राक्षसश्चैव पैशाचश्चाष्टमोऽधमः ।।२१।।

षडानुपूर्व्यान् विप्रस्य क्षत्रस्य चतुरोऽवरान् ।
विट् शूद्रयोश्च तानेव विद्याद्धर्म्या नराक्षसान् ।।२३।।

चतुरो ब्राह्मणस्याद्यान्प्रशस्तान्कवयो विदुः ।
राक्षसंक्षत्रियस्यैकमासुरं वैश्यशूद्रयोः ।।२४।।

पञ्चानां तु त्रयो धर्म्या द्वावधर्म्यौ स्मृताविह ।
पैशाचश्चासुरश्चैव न कर्तव्यौ कदाचन ।।२५।।

सुप्तां मत्तां प्रमत्तां वा रहो यत्रोपगच्छति ।
स पापिष्ठो विवाहानां पैशाचश्चाष्टमोऽधमः ।।

इत्युक्तैः श्लोकैः अष्टविध विवाह नाम निर्देश पूर्वकं तेषां प्रत्येक लक्षणमुक्त्वा, तत्र केच धर्म्याः केच अधर्म्याः केषां वर्णानां के च विवाहा उपोदयाः के च अनुपादेयाः इति विस्तरेण प्रतिपाद्यन्ते । एवमेव गौतमधर्म सूत्रे प्रथमप्रश्ने अध्याये

"ब्राह्मो विद्याचरित्र बन्धुशील संपन्नाय
दद्यादाच्छाद्यालंकृताम्" ।। ४

"संयोगमन्त्रः प्राजापत्ये सहधर्मचर्यतामिति ।। ५

आर्षे गोमिथुन कन्यावते दद्यात् ।। ६

अन्तर्वेद्यृत्विजे दानं दैवोऽलंकृत्य इच्छन्त्या स्वयं संयोगो
गान्धर्वः ।।८

वित्तेनानाक्षितिरवमितामासुरः । ९

प्रसह्याऽऽदानाद्राक्षसः ।। १०

असंविज्ञातोपसंयमात्पैशाचः ।। ११

चत्वारो धर्म्याः प्रथमाः ।। १२

षडित्येके १३

एतैः सूत्रैः अष्टविधविवाहानां लक्षणमुक्त्वा, तत्र ब्राह्म, प्राजापत्य, आर्ष, दैव संज्ञकांश्चत्वारो विवाहा धर्म्या इति केषांचन मतं उक्त्वा, गान्धर्वासुरयोरपि मेलनेन "षट विवाहा धर्म्याः" इति मतान्तरमपि प्रतिपाद्यते ।

विवाहाः-களவு (कलवु) नामक एकः, கற்பு (कर्पु) नामकोऽपरः इति प्रतिज्ञाय களவு विवाह लक्षणं களவியல் (कळवियल्) प्रकरणे, கற்பு (कर्पु) विवाहलक्षणं கற்பியல் (कर्पियल्) प्रकरणे च तोल्काप्पियर् कविः कथयति । तत्र होमादि वैदिककर्म पुरस्सरं मातापित्रोरनुमत्या वधूवरयोः क्रियमाणस्य "विवाहस्य" கற்பு इति नाम" इति கற்பியல் प्रकरणे

கற்பெனப்படுவது கரணமொடு புணரக்
கொளற்குரிய மரபின்கிழவன் கிழத்தியை
கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே (ஸூ-1)

इत्यस्मिन् सूत्रे கற்பு (कर्पु) विवाहस्य लक्षणमुच्यते । धर्मशास्त्रोक्त ब्राह्म विवाह एव கற்பு शब्देनात्र निर्दिश्यते । धर्मशास्त्रे प्रयुज्यमानः कल्पशब्दोऽत्र கற்பு शब्दात्मना परिणत आसीत् । कल्पमित्युक्तौ विधानमित्यर्थः । एवञ्च, शास्त्रोक्त विधानेन क्रियमाण विवाह इति अन्ते पर्यवस्यति ।

तत्र கற்பு विवाह लक्षण निरूपणात्मके கற்பியல் प्रकरणे கரணமொடு इत्येकः शब्दः प्रयुक्तः । करणेन सह इति तस्यार्थः । करणमित्यस्य अग्नौकरणमित्यर्थः । अन्ततः होम पुरस्सरं क्रियमाणो विवाह इत्यस्य सूत्रस्य तात्पर्यम् ।

களவியல் प्रकरणे களவு विवाह लक्षण प्रतिपादन रूपे--

இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்

காமக் கூட்டங் காணுங்காலை
மறையார் தேஎத்து மன்றல் எட்டனுள்
துறையமை நல்யாழ்த் துணைமையோர் இயல்பே (ஸூ-1)

इति प्रकृत सूत्रे उच्यमानः களவு विवाहो धर्मशास्त्रोक्त गान्धर्व विवाहात्मक एव भवति । सूत्रेऽस्मिन्

மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள் துறையமை நல்யாழ்த்துணைமையோர் இயல்பே

इति वाक्येन वेदविद्भिः प्रतिपादितेषु अष्टविधविवाहेषु गान्धर्व विवाहस्यैव (कलवु) शब्देनात्र व्यपदेशः'' इति कथयन्नयं तोलकाप्पियर् कविः मनु गौतम धर्मसूत्रादि धर्मशास्त्रप्रतिपादितां अष्टविधविवाह प्रक्रियां स्वयं सर्वात्मना मनुस्मृतीति सुस्पष्टं ज्ञायते ।

तत्रैव களவியல் प्रकरणे

முன்னைய மூன்றும் கைக்கிளைக் குறிப்பே -14

इत्येतेन सूत्रेण आसुरं, राक्षसं, पैशाचं इति त्रयाणामपि विवाहानां अधार्मिकत्वं

பின்னர் நான்கும்பெருந்திணை பெறுமே (ஸூ-15)

इति सूत्रेण ब्राह्म, प्राजापत्य, आर्ष, दैव संज्ञकानां चतुर्विधानामपि विवाहाना धार्मिकत्वं च निरूपयन्नयं तोल्काप्पियर् कविः विवाह विभजन विषय इव तेषां धर्म्याधर्म्यनिर्णय विषयेऽपि मनुस्मृति गौतमधर्मसूत्रादि धर्मशास्त्राणि अनुसृत्यैव ग्रन्थमेनं प्रणिनायेति कथनं समञ्जसं युक्तियुक्तञ्च भाति ।

"'विवाहकरणार्थं मातापित्रोरभावे कन्यका स्वत एव कस्मैचिद्वराय आत्मदानपुरःसरं विवहां कर्तुं शक्नुयात्'' इत्ययमर्थः கற்பியல் प्रकरणे

கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே
புணர்ந்து உடன் போகிய காலையான (ஸூ-2

इति सूत्रे प्रतिपादितोऽस्ति ।

'आत्मनो बन्धुरात्मैव गतिरात्मैव चात्मना ।
आत्मनैवात्मनो दानं कर्तुमर्हति धर्मतः ।।

इति श्लोकार्थं कविरयं, अत्र पूर्वोक्त सूत्रमुखेन निरूपयतीति सुस्पष्टमेतत् ।

होमादि वैदिक कर्मपुरस्सरं क्रियमाणो विवाहः आदौ त्रयाणामेव वर्णानां विहितः । कालक्रमेण शुद्रैरपि प्रक्रियेयं विवाहविषये अनुसृता आसीत् । इति கற்பியல் प्रकरणे-

மேலோர் மூவர்க்கும் புணர்ந்த கரணம்
கீழோர்க்கு ஆகிய காலமும் உண்டே (ஸூ-3)

इति सूत्रे तोल्काप्पियर् कविः निरूपयति । अस्मिन्विषये धर्मशास्त्रे कुत्रापि प्रमाणं नोपलभ्यते, परन्तु மேலோர், கீழோர் इति पदद्वयं अत्र प्रत्युक्तं दृश्यते ।

மேலோா் इत्यस्य ब्राह्मण, क्षत्रिय, वैश्या, उत्तमजातीया इत्यर्थः ।

கீழோர் इत्यस्य अधमजातीयाः शूद्रा इत्यर्थः ।

एवञ्च जातिषु उच्चनीच भावस्तस्मिन्नेवकाले द्रविडदेशे आसीत्।

तोल्काप्पियर् कविना विषयोयमङ्गीकृतमित्यनेन सूत्रेण निश्चेतुं शक्यः ।

ऋतावुपेयात्

स्त्रीणां रजोदर्शन दिनादारभ्य षोडशादिनपर्यन्तकालस्य ऋतुकाल इति नाम । तदानीमवश्यं स्त्रीसङ्गमो गृहस्थेन कर्तव्य इति धर्मशास्त्रेषु उद्घुष्यते । गौतमधर्मसूत्रे प्रथमप्रश्ने पञ्चमाध्याये "ऋतावुपेयात्" इति प्रथम सूत्रेण अमुमेवार्थं भगवान् गौतमो निरूपयति । एवमेव मनुस्मृतौ तृतीयाध्याये:-

ऋतुकालाभिगामी स्यात् स्वदारनिरतःसदा ।
पर्व वर्जं व्रजेच्चैनां तद्व्रतोरतिकाम्यया ।। ४५

ऋतुः स्वाभाविकः स्त्रीणां रात्रयः षोडशस्मृताः ।
चतुर्भिरितरैः सार्धमहोभिः सद्भिगर्हितैः ।। ४६

इत्येताभ्यां श्लोकाभ्यां षोडशदिनपरिमितिः ऋतकाल लक्षणमुक्त्वा तत्र गृहस्थेनावश्यकर्तव्यं भार्यासङ्गमं निरूपयति मनुः । एवमेव बोधायनधर्मसूत्रे "ऋतुस्नातां तु यो भार्यां सन्निधौ नोपगच्छति। पितरस्तस्य तन्मासे तस्मिन् रजसि शेरते (४-१-२०)

इति ऋतुकालासङ्गमेन जायमानं दोषमुक्त्वा ऋतुसङ्गमस्यावश्य कर्तव्यत्वं व्यतिरेक विधयात्र ऋषिः प्रतिपादयति ।

கற்பியல் प्रकरणे-

> பூப்பின் புறப்பாடு ஈர் ஆறு நாளும்
> நீத்தகன்று உரையார் என்மனார் புலவர்
> பரத்தையின் பிரிந்த காலையான (सू-४६)

इत्यास्मिन् सूत्रे "ऋतुकाले भार्या वियोगो अनुचित इत्युक्त्वा, स्त्रीणां रजो दर्शन दिनादारभ्य पञ्चदश दिनानां ऋतुकालत्वेन निर्देशः" इति ऋतुकाल परिमितिं च तोलकाप्पियर् कविर्निरूपयति ।

गौतमधर्मसूत्र, मनुस्मृति, बोधायन, तोल्काप्पियर् सूत्राणा एकार्थप्रतिपादकत्वरूपमैककण्ठ्यं दृश्यते । अनेन इदं स्पष्टमवगम्यते यत् तोल्काप्पियर् सूत्रस्य गौतमधर्मसूत्रादि धर्मशास्त्राण्येव मूलकारणानि भवन्तीति ।

"विद्या संपादनार्थं भर्तरि देशान्तरं गते षट् वर्ष पर्यन्तं भार्यया भर्ता प्रतीक्षणीया" इति ॥

*****

# II

# तोल्काप्पिय ग्रन्थे भरतनाट्य शास्त्रार्थ निरूपणम्

एतावता प्रबन्धेन द्रविडभाषायाः प्राशस्त्यं, सङ्ककाले सङ्घकविकृत–प्रथमद्रविडसाहित्यभूतानां तोकैपाट्टु संज्ञकानामष्टा-दशग्रन्थानां स्वरूप स्वभावादिकं, तेषु ग्रन्थेषु प्रतिपाद्यमान विषयादिकं अधिकृत्य विस्तरेण निरूपणं कृतमासीत् । किं बहुनोक्तेन? द्रविडसाहित्यचरित्रमेवात्र विस्तरेणोक्त प्रायमासीत् । सङ्ककाले द्रविडदेशे भक्तिप्रचारो विशेषेण जनैरकारि ।

वर्णाश्रमधर्मव्यवस्था तदानीमवर्तत । वेदधर्मशास्त्रादि संस्कृत-ग्रन्थेषु सर्वेऽपि जना अतीव श्रद्दालवस्तन्मार्गानुयायिनश्चासन् । पुराणानां तथा पुराणकथानाञ्च बहुभिः प्रकारैः प्रचारं कृत्वा, तत्र जनानां विश्वासमुत्पादयामासुः ।

सर्वेऽपि जनाः वेदमार्गावलम्बिनो वेदोक्तधर्मानुष्ठानपराश्चासन् । इत्येवमादिका विषया पूर्वोक्त द्रविड साहित्य ग्रन्थेभ्यो ज्ञाता भवन्ति । एतावतां प्रबन्धेन वर्णितं द्रविडसाहित्य चरित्रमतीवोपकारकं भवेत् । अनेन सङ्ककालीन कवयो भक्तिमार्गप्रचारैकपराः, वेदमार्गा-वलम्बिनः, धर्मशास्त्रानुष्ठानैकनिरताः, धर्मशास्त्रप्रचारैक बद्ध-कङ्कणाश्च बभूवुरिति सुस्पष्टं निर्णेतुं प्रभवामः ।

प्रकृते श्रुत्युपनिषत्पुराणदर्शनादि संस्कृत ग्रन्थार्थानां द्रविड-साहित्य ग्रन्थेषु विशिष्ट सङ्घकालीन ग्रन्थेषु निरूपणं यल्लक्ष्यमस्माकं, यश्च प्रकृते स्वीकृत विमर्शन शीर्षिकाया प्रधान प्रतिपाद्यो विषयस्तदधिकृत्य इत उपरि विस्तरेण वर्णयामः । पूर्वं द्रविडसाहित्य ग्रन्थस्वरूप स्वभाववर्णनेनैव आपाततः सर्वेषामिदं नावत् ज्ञात भवेत् यत् श्रुत्यपनिषत्पुराणाद्यर्थ प्रतिपादनैदम्पर्येणैव सङ्घकालीन ग्रन्था रचिता आसन्निति ।

## 1. तोल्काप्पियग्रन्थे भरतनाट्यशास्त्रार्थ निरूपणम् ।

अष्टविधरसानां, त्रयस्त्रिंशत् स्थायीभावानां दशविधावस्थानञ्च लक्षण निरूपणावसरे भरतनाट्यशास्त्रोक्तं प्रक्रियामनुसृत्य तथैवात्र निरूपणं कृतं दृश्यते । एतल्लक्षणनिरूपण विषये तोल्काप्पिय भरतनाट्य शास्त्रयोर्विद्यमानमैकमत्यं कीदृशमिति, एकैकं विषयमधिकृत्य क्रमेणात्र विमृशामः

## 2. तोल्काप्पियग्रन्थे भरतनाट्य शास्त्रोक्तस्य अष्टविधरसस्वरूपस्य निरूपणम् ।

भरतनाट्यशास्त्रे षष्ठाध्याये, ''श्रृङ्गार हास्य करुणाः रौद्र वीर भयानकाः । बीभत्साद्भुत संज्ञाचेत्यष्टौ नाट्ये रसाः स्मृताः ।। (६-१५) इति रसोऽष्टविध एवेति निर्दिश्य, *ततः क्रमेण हासो नाम

*श्रृङ्गार - वीर - करुण- अद्भुत - हास्य भयानकाः । बीभत्स रौद्रौ च रसाः- (அமரகோசம் 1-7-17)

परचेष्टानुकरणासम्बद्ध प्रलाप पौरोभाग्य सौख्यादिभि र्विभावै-रुत्पद्यते । (७-८) इति क्रमेण हासादि रसानां लक्षणमुक्त्वा, अन्ते रसो नवविध इति वदतां *केषाञ्चित् पक्षमनुसृत्य शान्तरस- लक्षणं कथ्यते । वस्तुतस्तु रसोऽष्टविध एवेत्येतत् भरतमुनेर्मतम् । भरतनाट्यशास्त्रोक्तं प्रक्रियामनुसृत्य

*மெய்ப்பாட்டியல்-3* (मेय्प्पाट्टियल)

> ‘நகையே, அழுகை, இளிவரல், மருட்கை,
> அச்சம், பெருமிதம், வெகுளி, உவகையென்று
> அப்பாலெட் டே மெய்ப்பாடென்ப’

इति सूत्रे मेय्पाडु शब्द वाच्यो रसः अष्टविध एवेति विशिष्य कथन पूर्वकं, तदनन्तरं क्रमेण चतुर्थसूत्रादारभ्य अवम सूत्र पर्यन्तं अष्टविधरसानामपि स्वरूपलक्षणमुक्त्वा अन्ते शान्तनामकः कश्चित् रसोऽस्तीति, अप्रधानतया मतान्तरमपि निर्दिशति ग्रन्थकारः । एवञ्चात्र रसविभाग विषये तत्संख्या निर्णय विषये च तोल्काप्पियनार् कविः भरतनाट्यशास्त्रं सर्वथा अनुसृतवानिति सुस्पष्टमवगम्यते ।

१. நகை (नकै) = हास्यरसः

२. அழுகை अलुकै = करुणरसः

---

*श्रृङ्गार वीर करुणाद्भुत हास्य भीति बीभत्स रौद्र विषयान् अतिवर्तमानः । तत्वावलोकन विभाव समेधितात्म शान्तो रसः स्फुरति मूर्त इवैष धन्यः ॥ (श्री वेदान्तदेशिकैः कृत सङ्कल्प सूर्योदये १०-अङ्के -४० श्लोकः)

